REGD. NO. M. 6511 ★ தனி;இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி. மு. க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

'நம் நாடு'
புதிய சந்தா விகிதம்
★

| | | | |
|---|---|---|---|
| மூன்று மாதம் | ... | ... | ரூ. 6 |
| ஆறு மாதம் | ... | ... | ரூ. 12 |
| ஒரு வருடம் | ... | ... | ரூ. 24 |

தனி இதழ் 7 காசுகள்
இலங்கையில் 10 சதம்

மலர் 4] சென்னை: சித்திரை 5உ புதன் (17—4—57) ★ ★ வெளியூர்: சித்திரை 6உ வியாழன் (18—4—57) [இதழ் 265

# 'காங்கிரசில் பதவிப் பித்தர்கள் ஏராளம்'

## குரங்கு வளர்ப்பில் ரஷ்யா அக்கரை?

ரஷ்யாவில் கருங்கடற்கரையோரத்தில் உள்ள சுகுமி நகரில் குரங்குப் பண்ணை ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது; இது, இங்கு உள்ள உயிர் நூல் ஆராய்ச்சி நிலையத்தைச் சேர்ந்தது.

30 ஆண்டுகளுக்கு முன்னர் ஏற்படுத்தப்பட்ட இந்தப் பண்ணையில் சுமார் 600 குரங்குகள் உள்ளன. 1955-1956ம் ஆண்டுகளில் இங்கு சுமார் 600 குரங்குகள் அதிகரித்தன.

இளங்குரங்குகளை வளர்க்கவும் குரங்குக் குட்டிகளை விசேடமாகக் கவனிக்கவும் இங்கு தனித் தனிப் பிரிவுகள் உள்ளன.

இங்கு உள்ள குரங்குகளுக்கு காய்கறிகள், பால், பழம், உருளைக் கிழங்கு, பருப்பு வகைகள் முதலியவற்றைக் கொண்டு பிரத்தியேக உணவு வகைகள் தயாரித்துக் கொடுக்கப்படுகின்றன.

சூழ்நிலை மாறுதல்களால் உடலில் ஏற்படும் மாறுதல்கள் இங்கு ஆராயப்படுகின்றன.

## 'அமைச்சர் பதவிக்கு ஆலாய்ப் பறக்கின்றனர்'

### 'நம்மைவிட்டு மக்கள் வெகுதூரம் விலகிச் சென்றுவிட்டனர் என்பதில் வியப்பில்லை'

### 'இறுதியான அழிவைத் தேடிக்கொள்ளத் தயாராக இருக்கவேண்டும்'

### 'உருவாக்கியவர்களின் பிடியிலிருந்து புரட்சி துண்டித்துச் செல்லும் கட்டம் நெருங்கிவிட்டது'

### தேபர் கண்ணோட்டமும்—கண்டனமும்

"காங்கிரசில் ஏராளமான பதவிப் பித்தர்கள் இருக்கின்றனர்; கட்சித் தலைவர்கள் தேர்தல் நடைபெறுவதற்கு முன்னரே, 'அமைச்சர்' பதவிக்காக சட்டசபை உறுப்பினர்கள் அலைந்தனர். அண்மையில் பண்டிதர் கூறியுள்ளதுபோல், அடுத்த இரண்டாண்டுக் காலம் காங்கிரசுக் கட்சிக்கு நெருக்கடியான காலமாகும்"

இவ்வாறு, காங்கிரசுக் கட்சியுடன் இன்றைய நிலை குறித்தும், எதிர்கால நெருக்கடி பற்றியும் காங்கிரசத் தலைவர் தேபர் அவர்கள், மாகாண காங்கிரசு தலைவர்கள்-செயலாளர்கள் அடங்கிய மாநாட்டில் பேசும்பொழுது குறிப்பிட்டிருக்கிறார்.

அவர் ஆற்றிய உரை அனைத்திந்திய காங்கிரசு ஏட்டில் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

அவ்வுரையில் மேலும் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:—

"பதவிப் பித்தையும், சுவையான வாழ்வையும் துச்சமெனக் கொள்ளாத கட்சி, தனது இறுதியான அழிவைத் தழுவிக்கொள்ளத் தயாராக இருக்கவேண்டும். ஆற்றலும், பதவிப் பித்தும், இணைந்து செல்ல முடியாது.

"சுதந்திரம் கிடைத்த நாளிலிருந்து இந்திய தேசியக் காங்கிரசிற்கு ஏதோ சம்பவித்து விட்டிருக்கிறது. நாம் நமது கடமைகளைக் கைகழுவி விட்டதாக, மெதுவாக—ஆனால் நமக்குத் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியாத வகையில் ஒரு எண்ணம் பொதுமக்களிடம் புகுந்து விட்டது.

'நம்மைவிட்டு மக்கள் விலகிச் சென்றுவிட்டதில் வியப்பில்லை. அப்பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் நிலையில் ஊழியர்களை நாம் உருவாக்க வேண்டும். சன சங்கத்தையும், பொதுவுடைமையர்களையும் மட்டும் எதிர்த்துப் போராடுவது மட்டும் போதாது. கட்சியிலுள்ள பதவிப் பித்தர்களையும், சோம்பலையும் நாம் எதிர்த்துப் போராடியாகவேண்டும்."

தம்மைப் பெரிதும் வருத்திக் கொண்டிருக்கின்ற முக்கியப் பிரச்சினை குறித்தும் அவர் அறிவித்துள்ளார். அதுபற்றி அவர் கூறியிருப்பதாவது:—

"போராட்ட மூச்சைத் தவிர காங்கிரசிற்கு வேறு எதுதான் உயிராக இருக்கிறது? அ. இ. கா. குழுவிலோ, பிரதேசக் காங்கிரசு அமைப்பிலோ, அல்லது வேறு நிறுவனத்திலோ நமக்கு சிறப்பான பதவி இருந்தாலும் இருக்கலாம்—இல்லாமலும் இருக்கலாம். பதவியிலிருப்பது நல்லதுதான். ஆனால் காங்கிரசோ வெறும் மண்ணாலும் கல்லாலும் கட்டப்பட்டதாக இல்லை. அது, சில தலைமுறைகளாக ஆற்றி வந்த தன்னல மறுப்பின் மீது கட்டப்பட்டதாகும். அதைத் தான் நாம் பழஞ்சொத்தாகப் பெற்றிருக்கின்றோம். அத்துடன், ஒன்றுபட்டாற்போல் பொறுப்பையும் பெற்றிருக்கின்றோம். நான் குறிப்பிட்டுள்ளதுபோல், கடின உழைப்புக்காக நாம் அஞ்சத் தேவை

(4-ம் பக்கம் பார்க்க)

## குளித்தலையில் கழக வீரர்களுக்கு மாபெரும் வரவேற்பு

### சட்டமன்ற உறுப்பினர்களின் இலட்சிய முழக்கம்

### இந்தியாவிலேயே நடைபெற்றில்லாத நேர்தல் புதுமைபற்றி மு. கருணாநிதி விளக்கம்

வெற்றி பெற்ற தி. மு. கழக எம். எல். ஏ.-க்கள், எம். பி.-க்கள் ஆகியோர்களுக்கு குளித்தலை வட்ட மக்கள் சார்பில் 14—4—57ல் மகத்தானதோர் வரவேற்பு வைபவம் நடைபெற்றது.

பல்லாயிரக்கணக்கான மக்கள் - ஏராளமான பெண்கள் உட்பட குழுமியிருந்த அந்தக் கூட்டம், காவிரியாற்றுக் கரையில், கடம்பர் கோவில் அருகில் நடைபெற்றது.

காலை முதல் மாலை வரை நடைபெற்ற போதுக் குழுக் கூட்டத்திற்குப் பின் நடைபெற்ற அந்தக் கூட்டம், குளித்தலை வட்டத்தில் கழகம் பெற்றுள்ள வளர்ச்சிக்கு சிறந்ததோர் எடுத்துக் காட்டாக அமைந்திருந்தது.

கூட்டத்திற்காக, அமைக்கப்பட்டிருந்த மேடை, கலையழகு மிக்கதாக, 'உதய சூரியன்' தோற்றம் தர, மிகக் கவர்ச்சிகரமாக அமைந்திருந்தது.

கூட்டம் துவங்குவதற்குச் சற்று முன், பிரமிக்கத்தக்க வாண வேடிக்கைகள் நடைபெற்றன.

குளித்தலைத் தொகுதியில் தோழர் மு. கருணாநிதியின் வெற்றியும், வெற்றி பெற்ற கழக வீரர்களின் வருகையும், குளித்தலை மக்களுக்குத் தந்த களிப்பின் விளைவுகளே இந்த அலங்காரங்கள்—வாண வேடிக்கைகள் எல்லாம்!

கூட்டம், மாலை 7 மணியளவில் துவங்கிற்று.

தலைவர்கள் ஒவ்வொருவராக மேடைக்கு வந்தபோது, கூடியிருந்த மக்கள் போராவாரம் செய்து வரவேற்றனர்.

தோழர் நாகூர்-அனீபா அவர்கள் கழகப் பண் பாடினார்.

தோழர் இளஞ்செழியன் முன்மொழிய, தோழர் தி. வீ. முத்துக்கிருஷ்ணன் வழிமொழிய, தோழர் மு. கருணாநிதி அவர்கள் கூட்டத்திற்குத் தலைமையேற்றார்.

அவர் தனது தலைமையுரையில் குறிப்பிட்டதாவது:—

"இங்கு வெற்றி பெற்ற கழக வீரர்களையும், வெற்றி தேடித் தந்த—வெற்றிக்குக் காரணமான மக்களையும் பாராட்டுவதற்காக நடைபெறுகிறது இந்தக் கூட்டம். இந்தக் கூட்டத்தை நடத்துபவர்கள், குளித்தலைப் பொது மக்கள் என்பது குறிப்பிடத் தகுந்தது.

"தேர்தலின்போது, கழகத்திற்கு எதிராகத் திரண்ட அநாகரிகமான எதிர்ப்புச் சக்திகளை மக்கள் முறியடித்திருக்கிறார்கள். அதனால் அவர்கள் பெறும் மகிழ்ச்சியைக் கொண்டாடவே இந்தக் கூட்டம்.

### கேலி பேசினர்

"'இவர்களுக்கு ஒரு இடங்களில்கூட வெற்றி கிடைக்காது' என்று, கேலி பேசினர் சிலர்! 'நான்கு அல்லது ஐந்து கிடைக்கலாம்,' என ஆருடம் கணித்தனர் வேறு சிலர்! இப்படியாக நடந்து கொண்டவர்களுக்கு எல்லாம் நல்ல விளக்கம் தரும் வகையில் கழகம் மகத்தான வெற்றிகளைப் பெற்றிருக்கிறது.

### பெண்கள் பங்கு

"காமராசர் கூறினார்—'பெண்களே கழகத்தவரைத் தோற்கடித்து விடுவார்கள்'—என்று! ஆனால் நான் கூறவிரும்புகிறேன்—'இந்தத் தொகுதியில் நான் பெற்ற வாக்குகள் 22,000; இதில் பெண்கள் தந்த வாக்கு மட்டும் 12,500'—என்று!

### இந்தியாவில் இல்லாத புதுமை!

"மற்றும், இந்தியாவிலேயே இல்லாத புதுமை ஒன்று இந்தத் தொகுதியில் நிகழ்ந்தது.

"தண்ணீர்ப்பள்ளி பெண்கள் ஓட்டுச்சாவடியில், 'உதய சூரியன்' பெட்டியில் தவிர வேறெந்தப் பெட்டியிலும் ஓட்டுக்கள் விழவே இல்லை; அந்தனையும் காலியாக இருந்தன. இந்தியாவில் வேறெந்தத் தொகுதியிலும் இப்படி ஒரு நிலை ஏற்பட்டதாக ,எனக்குத் தெரியவில்லை. அந்த அளவுக்குத் தாய்மார்களின் ஆதரவு கழகத்திற்கு இருந்தது—இருக்கிறது.

### நன்றி!

"இப்படி மகத்தான ஆதரவு தந்த மக்களுக்கு நான் உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்."

பின்னர், வெற்றி பெற்ற தோழர்கள் எம். பி. சுப்பிரமணியம், தர்மலிங்கம், எம். பி. சாரதி, ஏ. கோவிந்தசாமி, ஈ. வே. கி. சம்பத், தோழியர் சத்தியவாணிமுத்து, இருசப்பன், க. அன்பழகன், சந்தானம் ஆகியோர் பேசினர்.

அடுத்து, துணைப் பொதுச் செயலாளர் என். வி. நடராசன் சிறிது நேரம் பேசினார்.

அடுத்தாற்போல் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், தேர்தலில் கழகம் பெற்றுள்ள வெற்றி தோல்விகள் குறித்து அரியதோர் ஆராய்ச்சி உரை நல்கினார்.

இறுதியாக, அண்ணா அவர்கள், 'தேர்தலும் அதன் விளைவுகளும்' குறித்து சிறப்பானதோர் கொள்கை விளக்கவுரை நிகழ்த்தினார்.

தலைவர் முடிவுரைக்குப் பின் நன்றி நல்கப்பட்டு கூட்டம் வெகு இனிதாக முடிவுற்றது.

★

## வெற்றி பெற்ற கழகத் தோழர்கட்கு குளித்தலை பஞ்சாயத்து போர்டு வரவேற்பு

### மன்றங்களும், கழகங்களும் மலர் மாலை — கைத்தறி ஆடைகள் அணிவித்து மகிழ்ந்தன

தோழர் மு. கருணாநிதி அவர்களின் தலைமை உரைக்குப் பின், குளித்தலை பஞ்சாயத்து போர்டு சார்பில், தலைவர் வையாபுரிபிள்ளை அவர்கள், அண்ணா மற்றும் வெற்றி பெற்றவர்களுக்கு வரவேற்பு இதழ் வாசித்தளித்து மாலை அணிவித்து மகிழ்ந்தார்.

அதனைத் தொடர்ந்து நூற்றுக் கணக்கான மலர் மாலைகளும், கைத்தறி ஆடைகளும் பல்வேறு மன்றங்கள், கிளைக் கழகங்கள், தனிப்பட்டவர்கள் சார்பில் அணிவிக்கப்பட்டன.

நம் நாடு
தி.மு.க. தினஇதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 17—4—57 புதன்

# 'இது உங்கள் ஆட்சி'

முதலமைச்சர் காமராசர் பதவி ஏற்றதும், வானொலி மூலம், பொதுவாகப் பொது மக்களுக்கும் குறிப்பாக எதிர்க் கட்சியினருக்கும் ஒத்துழைக்கும்படி அன்பழைப்பு விடுத்திருந்தார். அதுபற்றி நேற்று குறிப்பிட்டிருந்தோம். இன்றும் அதைத் தொடர்ந்தே எழுதுகிறோம்.

தேர்தல் வேகத்தை மறந்து நாட்டு மக்கள் பொதுநலனுக்காக பாடுபட வேண்டியது நம்மனைவரின் கடமையுமாகும் என முதலமைச்சர் குறிப்பிட்டுள்ளார். தேர்தல் காலத்தில் வேகமாக இருந்தவர்களும், மாற்றுக் கட்சியினரை முறை தவறி தாக்கிப் பேசி வந்தவர்களும், காங்கிரசு உள்ளிட்ட மற்ற கட்சியினரே ஆவர். நமது தி. மு. கழகம், எப்பொழுதும் கண்ணியமாகப் பேசிவருவதே போன்றுதான், தேர்தல் நேரத்திலும் மாற்றுக் கருத்தினரின் கோட்பாடுகளையும் செயல் முறைகளையும், கொள்கை ரீதியில் கண்டித்துப் பேசிற்று. எனவே, நாம் கைவிட வேண்டிய தேர்தல் வேகமோ, கற்க வேண்டிய மக்கள் பொது நலனுக்குப் பாடுபட வேண்டிய புத்துணர்வோ எதுவும் இருக்கவில்லை. அவை அனைத்தையும் நிறைவேற்ற வேண்டிய நிலையில் என்றும்போல் இன்றும் இருப்பது கனம் காமராசர் அவர்களைத் தலைவராகக் கொண்டு அரசு கட்டில் ஏறியுள்ள காங்கிரசுக் கட்சியேயாகும். எனவே, மற்றவர்களால் பின்பற்றப்பட வேண்டும் என அவர் காட்டும் முறையை, முதல் முதலாக அவரும், அவர் தம் கட்சியினரும் பின்பற்ற முன்வரவேண்டும் என, அவரைப்பணிவன்புடன் வேண்டிக் கொள்ளுகிறோம்.

மழை விட்டும் தூவானம் விடவில்லை என்பார்கள். அதே போன்று தேர்தல் நேரத்தில், காங்கிரசு அமைச்சர்களின் அச்சுறுத்தலுக்கும் ஆணைக்கும் ஆட்பட்டு, தேர்தல் நேரத்தில் காங்கிரசு அபேட்சகர்களுக்குச் சாதகமாக, முறைதவறி நடந்து கொள்ளக் கற்றுக்கொண்ட சிறு போலிஸ் அதிகாரிகளில் சிற்சிலர், இன்னமும் தேர்தல் வேகத்திலேயே இருந்துவருகின்றனர் என நாம் அறிகிறோம்.

தேர்தல் நேரத்தில் பெற்றுவிட்ட மனவளத்துடனேயே, அவர்களில் இரண்டொருவர், இப்பொழுதும் தீவிரமாக செயலாற்றி வருகின்றனர் என்றும் நமக்கு தகவல் கிடைத்தவண்ணம் உள்ளது. தேர்தல் முடிந்துவிட்டது, என்ற உண்மையை அந்த அதிகாரிகளுக்கு நினைவுபடுத்தி, காங்கிரசு உள்ளிட்ட மற்ற கட்சியினரையும் ஒரே மாதிரி மதித்து நடந்துகொள்ளும்படி கட்டளை பிறப்பிக்கவேண்டும் கனம் காமராசர். இதில் தாமதம் காட்டக்கூடாது. அப்பொழுதுதான், மாற்றுக் கட்சியினரின் ஒத்துழைப்பை மனத் தூய்மையுடன்தான் கோருகிறார் என்ற உண்மை மெய்ப்பிக்கப்பட்டதாகும்.

நாடு வளம்பெற இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் தீட்டியுள்ளதாகவும், அதைச் செயலாற்றிவருவதாகவும், அதனால் இன்பநிலையை ஒரே நாளில் பெற்றுத்தர முடியாது என்றும், அது மந்திரக்கோல் அல்லவென்றும், கனம் காமராசர் குறிப்பிடுவதின் மூலம், இரண்டாவது திட்டத்தினால் தமிழ் நாட்டு மக்கள் பெரும் பயனை எதிர்பார்க்க முடியாது என்றஉண்மையை சொல்லாமல் சொல்லி உள்ளார். இத்தொடரில், அடுக்குமொழி பேசும் மாபாதகத்தைச் செய்துவருவதாக நம்மீது சாட்டப்படும் குற்றத்தைத் தாமே துணிந்து செய்தும் உள்ளார். 'நாட்டு மக்களின் சக்திகளை ஒன்று திரட்டி, அவர்கள் முயற்சிகளை ஒழுங்குபடுத்தி, உழைப்பையும் உணர்வையும் ஒன்றாகப் பூட்டி, முன்னேற வழிகாட்டுவதே ஐந்தாண்டுத் திட்டம்' என்று அடுக்கு மொழியில் விளக்கியுள்ளார் கனம் காமராசர்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் தமிழகம் பெற்ற பலன் என்ன என்பதை கனம் காமராசர் நன்கு அறிந்திருக்கின்றார். இரண்டாவது திட்டத்தில் தமிழகம் மறுமுறையும் ஏமாற்றப்பட்டிருப்பதையும் அவர் உணர்ந்திருக்கின்றார்.

இரண்டு திட்டங்களில் தமிழகம் வஞ்சிக்கப்பட்டிருப்பதை அவரே தெளிவாகத் தெரிந்திருந்த போதிலும், அவர் வெளியில் கூற அஞ்சுகிறார். அதை நாம் வெளிப்படையாகக் கூறி பரிகாரம் தேடும்படி அவரை வற்புறுத்தி வந்தோம். இனியும் அதைத் திட்டவட்டமாக சட்டசபையில் இருந்துகொண்டும் செய்யத்தான் செய்வோம். இந்த நியாயமான கோரிக்கையை வற்புறுத்தி வருவது நமது கடமை. நமது கடமை உணர்வுக்கு மதிப்பளித்து நடந்துகொள்ள கனம் காமராசர் முன்வர வேண்டும். நமது கடமையை நாம் செய்ய முனையும்பொழுது, அம்முனைப்பைத் தமது ஆட்சிக்கு எதிராக செய்யப்படும் செயல் என அவர் கொள்ளுவது முறையாகாது. அவ்வாறு கொள்ள முன்வருவது சனநாயகக் கோட்பாடுகளுக்கும், நீதிக்கும் முரண்பட்டதாகும்.

'மக்களின் துரலே அரசாங்கத்தின் ஆணையாக வேண்டும். அத்தகைய நிலையை உருவாக்க நாம் பாடுபடுவோம். அம்முயற்சியில் எல்லாக் கட்சிகளின் யோசனைகளையும் ஒத்துழைப்பையும் நாம் வரவேற்போம். நான் மக்களிடம் கூற விரும்புவது இது; 'இது உங்கள் ஆட்சி; இதைத் திறம்பட நடத்த எங்களுக்குத் துணை செய்யுங்கள்.'' என்று இறுதியாகக் குறிப்பிட்டுள்ளார்.

ஆளும் கட்சிக்கு, எதிர்க் கட்சியினர் சட்டசபையிலும் வெளியிலும தரக்கூடிய ஒத்துழைப்பின் தன்மையும் அளவும், ஆளும் கட்சியினர் சட்ட சபையிலும் வெளியிலும் எதிர்க்கட்சியினரை நடத்த முன்வரும் தன்மையிலும் தரத்திலும் அடங்கியிருக்கிறது. மாற்றுக் கட்சி அமைப்பில் சிறிதாக இருந்தாலும் பெரிதாக இருந்தாலும், உருவத்தைக் கொண்டு மட்டுமே தாங்கள் மேற்கொள்ளவேண்டிய செயல் முறையை நிச்சயித்துக்கொள்ளாது, மனத்தூய்மையுடன் எதிர்க் கட்சிக்குரித்தான நியாயமான மதிப்பைத் தந்து, செயல்பட ஆளும் கட்சியினர் முன்வரவேண்டும். அந் நிலையில் எதிர்க்கட்சியும், தன் கருத்தைக் கண்ணியமான முறையிலும் நயமான சொற்களாலும் வற்புறுத்துவதுடன், தனக்கு நியாயமானது எனப்படுகின்ற அரசாங்கம் மேற்கொள்ளுகின்ற பணிகள் பலவற்றிற்கும், தனது இதயபூர்வமான ஒத்துழைப்பைத் தர முன்வரக் கூடும்.

இப்புனிதமான வழியை மறந்து, எதிர் கட்சியின் எண்ணிக்கைக் குறைவு ஏளனத்துக்குரியது, புறக்கணிக்கத்தக்கது என்றக் கவறனதும், சனநாயக உணர்வுக்கு முரணானதுமான ஆணவ முனைப்புடன் ஆளும் கட்சியினர் செயல்பட முன்வந்தால், நாட்டில் மட்டும் அல்ல, சட்ட சபையிலும்கூட எவ்வளவுதான் சிறிதாக இருக்கின்ற எதிர்க் கட்சியாக இருந்தபோதிலும் ஆளவந்தார்களின் ஆணவ முனைப்பை எதிர்த்துப் போரிடுவதைத்தான் தனது பணியாக அமைத்துக்கொள்ளக்கூடும். எனவே, 'இது உங்கள் ஆட்சி' என்று கனம் காமராசர் வானொலியில் அறிவிப்பதுடன் இருந்துவிடாது, அத்தத்துவத்தைச் செயலளவிலும் நிலை நாட்ட முன்வரவேண்டும். அந்நிலையில் நமது கழகத்தின் ஒத்துழைப்பு, அரசாங்கம் மேற்கொள்ளக் கூடிய நற்பணிகள் அனைத்துக்கும் நிச்சயமாகக் கிடைக்கக் கூடும் என்பதை கனம் காமராசர் அவர்களுக்கு அறிவித்துக் கொள்ளுகிறோம்.

## வறண்ட பகுதிகளை வளமாக்கத் திட்டம்

### இலட்சக் கணக்கான ஏக்கர்கள் சாகுபடிக்கு பயன்படும்

இலட்சக்கணக்கான ஏகர் பரப்பளவுள்ள வறண்ட பிரதேசங்களை சாகுபடிக்குக் கொண்டு வரவும், ஏராளமாக மின்சார உற்பத்தி செய்வதற்கும் பிரம்மாண்டமானதோர் திட்டமொன்றை ரஷ்யா மேற்கொண்டிருக்கிறதாம்.

இதற்காக, ரஷ்யாவில் வடக்கு நோக்கிப் பாய்ந்து கொண்டிருக்கும் பல ஆறுகளின் திசையையே மாற்றுவதற்கு சோவியத் எஞ்சினியர்கள் திட்டமிட்டிருக்கின்றனராம்.

இந்த ஆறுகளின் போக்கை மாற்றுவதற்கு 80 கோடி கன கெசம் மண்ணை — அதாவது, சூயஸ் கால்வாயை வெட்டுவதற்குத் தோண்டி யெடுக்கப்பட்ட மண்ணைப் பார்க்கிலும் 10 மடங்கு வெட்டியெடுக்க வேண்டியிருக்கிறதாம்.

## நிலச் சீர்திருத்த மசோதா

### மூன்று மாத காலத்திற்குள் ஆந்திராவில் கொண்டு வரப்படும்

இன்னும் மூன்று மாத காலத்திற்குள், திட்டக்குழு சிபாரிசு செய்துள்ள ரீதியில், நிலச் சீர்திருத்தம்பற்றிய விரிவான மசோதா ஒன்று ஆந்திர சட்ட சபையில் கொண்டு வரப்படும்.

# சுயாட்சி விரிவுபடுத்தப்படுமாம்

## இந்தோனேஷிய புதுப் பிரதமர் வாக்குறுதி

ஜகார்தா, ஏப். 16—

இந்தோனேஷியாவில் புதிய பிரதமராகப் பதவி ஏற்றுள்ள டாக்டர் துஜாந்தா, சுயாட்சி கோரி கிளர்ச்சியில் ஈடுபட்டுவரும் பகுதிகளுக்கு மேலும் சுயாட்சியை விரிவுபடுத்துவதாக வானொலி மூலம் வாக்களித்துள்ளார்.

வெளிப் பகுதியிலுள்ள தீவுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கும், மக்கள் நல்வாழ்விற்கும், பாதுகாப்பிற்கும் கூடுமானவரை தக்க நடவடிக்கை மேற்கொள்ள இருப்பதாகவும் அவர் அறிவித்தார்.

'தனித்த பாராளுமன்ற அமைச்சரவை' எனத் தனது அமைச்சரவை அழைக்கப்படுவதைக்கொண்டு, தனது மந்திரி சபை பாராளுமன்றத்திற்குக் கட்டுப்பட்டதல்ல என எவரும் எண்ணக்கூடாது என்றும், தனது அமைச்சரவைக்கு ஆலோசனை கூற பாராளுமன்றத்தற்குக் கட்டுப்படாத ஒரு தனிக் குழு நியமித்திருப்பது குறித்துத் தாம் இன்னும் குடியரசுத் தலைவர் சுகர்ணோவை கலந்து பேசவில்லை என்றும் அவர் அறிவித்துள்ளார்.

மதத்தை அடிப்படையாகக் கொண்டு இயங்கிவரும் கட்சிகள், பாராளுமன்றத்திற்குக் கட்டுப்படாத நிலையில் புதிய அமைச்சரவை அமைக்கப்பட்டிருப்பதாகக் கூறி, அந்த அமைச்சரவையை ஏற்க மறுத்துவருகின்றனர்.

## அரைகுறை சம்பள உயர்வின் எதிரொலி!

### 'இரயில்வே ஊழியர்களிடையே அதிருப்தியை ஏற்படுத்துகிறது'

ஆமதாபாத், ஏப். 16—

"அங்குமிங்குமாக அரைகுறை சம்பள உயர்வுகளை இரயில்வே நிர்வாகம் அறிவித்து வருவதானது, இரயில்வே ஊழியரிடையே அதிருப்தியை ஏற்படுத்தி வருகிறது.

என்று, இந்திய இரயில்வே ஊழியர்கள் தேசிய சம்மேளனத்தின் காரியக் கமிட்டி தீர்மானமொன்றை நிறைவேற்றி யிருக்கிறது.

இரயில்வே ஊழியர்களின் சம்பள விகிதங்களை மாற்றியமைக்க விரைவில் ஒரு ஊதியக்குழு நியமிக்கப்பட வேண்டுமெனவும் கோரப்பட்டிருக்கிறது.

ஒழுக்கம் குறைவாக உள்ள வட இந்திய இரயில்வே சங்கத்தை (25,000 உறுப்பினர்களைக் கொண்டது) நீக்கிவிடலாமென பொதுக்கவுன்சிலுக்கு சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது.

## மாநில சர்க்கார்கள் மீது டில்லி அவநம்பிக்கை?

### உத்திரப்பிரதேச சர்க்கார் செய்கையினுல் ஏற்பட்டவினை?

ஐதராபாத், ஏப். 16—

மாநில சர்க்கார்கள் சிமெண்டுத் தொழிற்சாலைகளை ஆரம்பிப்பதை மத்திய சர்க்கார் விரும்பவில்லையாம்!

உத்திரப்பிரதேச சர்க்கார் ஒரு சிமெண்டுத் தொழிற்சாலையை ஆரம்பித்து நடத்தியதில் பெரும் நஷ்டம் ஏற்பட்டதாம்!

ஆகவே, தனி நபர்கள் நடத்திவரும் இந்தத் தொழிலில் மாநில சர்க்கார்கள் தலையிடக்கூடாதாம்!

இவ்வாறெல்லாம், 'நாகார்சுன சாகர் திட்டப் பிரதேசத்தில் சிமெண்டு தொழில் ஆரம்பிப்பதற்கு ஆந்திர சர்க்காருக்கு ஏன் அனுமதி தரப்படவில்லை?' என்று கேட்கப்பட்ட சேள்வியொன்றுக்குப் பதிலளிக்கையிலேயே மத்திய கனரகத் தொழில்கள் இலாகா அமைச்சர் எம். எம். ஷா கூறியதாகச் செய்தி ஒன்று வெளியாகியுள்ளது.

## 490 இலட்சம் டன் கிடைக்கும் நிலக்கரி சுரங்கம்

### பீகாரில் கண்டுபிடிப்பு

புதுடில்லி, ஏப். 15—

பீகாரில், தெற்கு கான்பூரா நிலக்கரி வயலுக்கு அருகில், மேலும் 4 கோடி 90 இலட்சம் டன் நிலக்கரி கிடைக்கக்கூடிய சுரங்கம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறதாம்.

தேங்கிக் கிடக்கும் நிலக்கரியை மதிப்பிட 59 துளைகளில் 21,507 அடி ஆழம் தோண்டப்பட்டிருக்கிறது.

## சென்னை அதிகாரிகளின் புள்ளி விவரங்கள்

### தவறானது என்ற புகார் பற்றி ஆந்திர முதலமைச்சர்

ஐதராபாத், ஏப். 16—

எல்லை சம்பந்தமாக சென்னை—ஆந்திரா ஆகிய இரு சர்க்கார்களுக்கிடையே இருந்துவரும் பிரச்சினையில் சென்னை சர்க்கார் நியமித்துள்ள பிரத்தியேக அதிகாரிகள் எடுத்த மக்கள் தொகையின் புள்ளி விவரங்கள் தவறானது—ஆதாரமற்றது என்று சித்தூர் மாவட்ட மக்கள் தூதுக்குழு கூறியதாக ஆந்திரப் பிரதேச முதலமைச்சர் என். சஞ்சீவ ரெட்டி சட்டசபையில் கூறியுள்ளார்.

'மக்கள் தொகைக் கணக்கில் முரண்பாடு இருப்பதை சம்பந்தப்பட்ட மேல் அதிகாரிகளுக்குத் தெரிவிக்கப்பட்டதா?' என்று சட்டசபையில் கேள்வி கேட்கப்பட்டபொழுது முதலமைச்சர் மேற்கண்ட பதிலைக் கூறினர்.

எல்லை சம்பந்தமாக இருசர்க்கார்களுக்கும் பேச்சுவார்த்தை நடக்கும்பொழுது இந்த முரண்பாடுகளை சரிசெய்துகொள்ளலாம் என்றும் அவர் கூறினர்.

## காலம் மாறுகிறது!

### கிராம அதிகாரிகள் கண்ணீர் துடைக்கப்படுகிறது

திருவனந்தபுரம், ஏப். 16—

மலபாரிலுள்ள கிராம அதிகாரிகளின் சம்பளம்—அலவன்சுகள் உயர்த்தப்பட்டிருக்கிறது; ஏப்ரல் மாதம் முதல் இச்சம்பள உயர்வு அமுலுக்குவர கேரள சர்க்கார் உத்திரவிட்டிருக்கிறது.

இச்சம்பள உயர்வினுல் சர்க்காருக்கு ஆண்டுதோறும் ரூ. 7,10,000 செலவாகுமென மதிப்பிடப்பட்டிருக்கிறது.

கிராமத் தலையாரி, கர்ணம், 'கோல்காரன்' ஆகியோர் அதிகப்படியாக மாதத்திற்கு ரூ. 15-லிருந்து ரூ. 20வரை பெறுவர்.

தற்போது கிராம அதிகாரிகளுக்கு ரூ. 17 அடிப்படைச் சம்பளமும், ரூ. 15 அலவன்சும் கிடைக்கிறது: இனி மாதம் ரூ. 52 அவர்களுக்குக் கிடைக்கும்.

## தோட்டத் தொழில்கள்

### கம்யூனிஸ்டு சர்க்கார் நிலை என்ன?

திருவனந்தபுரம், ஏப். 15—

"தேயிலை, காப்பி போன்ற தோட்டத் தொழில்களை அரசாங்க உடைமையாக்கும் பிரச்சினையை உடனடியான வேலைத் திட்டமாக கம்யூனிஸ்டு சர்க்கார் எடுத்துக்கொள்ளாது'' என்று, கேரள நிதி மந்திரி அச்சுத மேனன் சூசகமாகத் தெரிவித்துள்ளார்.



# நியாயமான கோரிக்கைகளை ஏற்காத நிலைமை மேலும் நீடித்தால்!

## 'ஊழியர்களிடையில் மனக்கசப்பு நிலவும்'

### ஆட்சியாளருக்கு ஈ. வெ. கி. சம்பத் எச்சரிக்கை

குடந்தை, ஏப். 16—

அகில இந்திய அஞ்சல் ஊழியர் சங்கத்தின் (மூன்றாவது பிரிவு) குடந்தை கிளையின் ஆண்டு மாநாடு சம்பந்தமாக பொதுமக்களுடன் தொடர்பைப் பலப்படுத்தும் ஓர் கூட்டம், ஜூபிலி பூங்காவில் 7—4—57ல் நடைபெற்றது.

கூட்டத் துவக்கத்தில், குடந்தை தபால்-தந்தி ஊழியர்கள் ஊர்வலமாக முக்கிய வீதிகளின் வழியாக கூட்டம் நடைபெறும் இடத்திற்கு வந்தனர்.

**'குடந்தை'யாக வேண்டும்**

'கும்பகோணம்' என்றபெயரை மாற்றி, 'குடந்தை' என்று அழைக்கவேண்டும் என நகர சபைக்கு யோசனை கூறி, ஒரு தீர்மானம் கூட்டத்தில் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

**ஈ. வெ. கி. சம்பத்**

இந்த மாபெரும் கூட்டத்தில் மக்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தோழர் ஈ. வெ. கி. சம்பத் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றினர்.

தபால்-தந்தி ஊழியர் சங்கம் இயங்கிவரும் முறையைப் பாராட்டி, தொழிற்சங்க முறையில் இந்தச் சங்கம் கையாண்டுவரும் செயல்களை வரவேற்று, அரசியல் கட்சிகளுடன் தொடர்பு கொண்டு, அடிமையாகி ஏமாற்றமடையாது எப்போதும் தனித்து இயங்கி வரும் பெருமையை தபால் - தந்தி ஊழியர் சங்கம் பெற்றிருப்பதை சுட்டிக் காட்டி, அரசாங்கம் இத்தகைய சங்கங்களுக்கு ஆதரவு தரவேண்டியதின் அவசியத்தை வலியுறுத்தினர்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றி அவர் பேசுகையில், திட்டம் வெற்றிபெற இந்திய அரசாங்கம் நாட்டின் ஊழியர்களைத் திருப்திப் படுத்த வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும் என்பதனைச் சுட்டிக் காட்டினர்.

வெளிநாடுகளில் பல்வேறு தொழில்களுக்கும் உள்ள ஊதிய நிர்ணய நிறுவனங்களைக் கலந்தாலோசித்து, புள்ளிவிவரங்களைக் கண்டறிந்து, இந்த நாட்டில் உள்ள ஊழிர்களுக்கும் தக்கபடி ஊதிய உயர்வளித்த அவர்களின் குறைகளைக் களைந்தெறிய வேண்டும் என்று அறிவுறுத்தினர்.

அரசாங்கம் தபால்—தந்தி ஊழியர்களின் நியாயமான கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ளாமல் இருப்பதை வன்மையாகக் கண்டித்து, இதே நிலை மேலும் நீடித்தால் அரசாங்கத்தின் உள் நோக்கம் பற்றி ஊழியர்கள் மனக்கசப்படைவதோடு, சந்தேகிக்கவும் கூடும் என்று எச்சரித்தார்.

செயலாளர் கேசவலு நன்றி நவில கூட்டம் முடிவுற்றது.

## ஆலை முதலாளிகள் இலாபம் பெருகுகிறது!

கோவை, ஏப். 9—

ஒவ்வொரு ஆண்டிலும், முன்னைய ஆண்டைவிட மில் முதலாளிகளுக்கு இலாபம் அதிகரித்துக் கொண்டே போகிறது; என்றாலும் சம்பளம், போனஸ் பற்றி கோர்ட் தீர்ப்புகளை அமுல் நடத்துவதில் மட்டும் 'இடக்கு' பண்ணுகிறார்கள்.

**கோவை இலட்சுமி மில்**

1956-ம் வருடம் இலாபம் ரூ. 21 இலட்சத்து 76 ஆயிரம்.

1956-ல் இந்த மில்லுக்கு, துணி, நூல் கழிவு முதலியவை விற்ற வகையில் கிடைத்தது 2 கோடியே 46 இலட்சம் ரூபாய்,

**காட்டன் மில்**

1954-ல் இந்த மில்லின் மொத்த இலாபம் ரூ. 12 இலட்சத்து 84 ஆயிரம்.

1955—ம் வருடத்தில் ரூ. 14 இலட்சத்து 88 ஆயிரம்.

1956-ம் வருடத்தில் ரூ. 16 இலட்சத்து 9 ஆயிரம்.

இதில் 1955-ல் செலவுத் தொகை எல்லாம்போக சுளை சுளையாய் கையில் கிடைத்த நிகர இலாபம் ரூ. 3 இலட்சத்து 78 ஆயிரம்.

1956-ல் நிகர இலாபம் ரூ. 5 இலட்சத்து 57 ஆயிரம்.

—'ஜனசக்தி': 12-4-57

## நன்றியறிவிப்பு

★

சங்கரித் தொகுதியில் தி. மு. கழகச் சார்பில் போட்டியிட்ட எனக்கு உழைத்த தோழர்களுக்கும், வாக்களித்த பொது மக்களுக்கும் எனது மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்வதுடன், எனது தோல்வியைப் பொருட்படுத்த வேண்டியதில்லையென என்னை உற்சாகமூட்டும் வகையில் கடிதமெழுதிவரும் தோழர்களுக்கும் என் நன்றிகலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்பன்
**இரா. தாண்டவன்**

★

பொதுத் தேர்தலில் வீரபாண்டி தொகுதியில் எனக்காக அல்லும் பகலும் அயராது உழைத்த நண்பர்களுக்கும், கழகத் தோழர்களுக்கும் என்னுடைய அன்புகலந்த நன்றியும் வணக்கமும் உரித்தாகுக.

அன்பன்
**கே. வி. பழனிச்சாமி**

★

தேர்தலில் தஞ்சை தொகுதியில் கழகச் சார்பில் போட்டியிட்ட எனக்கு அயராது பாடுபட்ட கழகத் தோழர்களுக்கும், மாற்றுக்கட்சி அன்பர்களுக்கும், பொதுமக்களுக்கும் என்னுடைய நன்றிகலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அன்பன்
**எஸ். பெத்தண்ணன்**

# சென்னையில் சிறப்புக் கூட்டம்

## எம். ஜி. இராமச்சந்திரன், கண்ணதாசன் கலந்து கொண்டனர்

13—4—57 காலை 10 மணியளவில், சென்னை கோகலே மண்டபத்தில், சென்னை-இராயப்பேட்டை பெண்கள் படிப்பகச் சார்பில் நடிகர் தோழர் என். எஸ். நாராயணன் தலைமையில் ஓர் சிறப்புக் கூட்டம் நடைபெற்றது.

தலைவர் தனது முன்னுரையில் கூட்டத்தின் நோக்கத்தையும், சொற்பொழிவாளர்கள் பேசவிருக்கும் தலைப்புகளைப் பற்றியும் நகைச்சுவை ததும்பப் பேசினர்.

அடுத்து திரு. கா. அப்பாதுரையார் அவர்கள் சிறிதுநேரம் பேசியபின், புரட்சிநடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் 'கலைஞனின் நாட்டுப் பற்று' என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினர்.

அவர் தனது சொற்பொழிவை முடித்துக்கொண்ட பின், பெண்கள் படிப்பகத்திற்காக ரூ. 305/ கொண்ட பணமுடிப்பை திருமதி அலமேலு - அப்பாதுரை அவர்களிடம் கொடுத்தார்.

பணமுடிப்பைப் பெற்றுக் கொண்ட திருமதி அலமேலு அப்பாதுரையார் அவர்கள், கழகம் வளர்ந்த வரலாறு கூறி, எம். ஜி. ஆர். அவர்களின் வள்ளல் தன்மைக்குப் பாராட்டும் - நன்றியும் தெரிவித்துக்கொண்டு, அப்பணமுடிப்பை பெண்கள் படிப்பகச் சார்பில் கழக ஊழியர் தோழர் கோ. இளவரசு அவர்களுக்கு நன்கொடை நிதியாக அளித்தார்.

தோழர் கோ. இளவரசு தனக்கு அளித்த உதவிக்கு நன்றி கூறிக்கொண்டார்.

அடுத்து தோழர் கண்ணதாசன் அவர்கள், 'கவிஞனும் காதலும்' என்ற தலைப்பில், உணர்ச்சியூட்டத்தக்க சிறப்புரையாற்றினர். அவர் ஆற்றிய இந்த இலக்கிய விருந்து, வந்திருந்தோர் பாராட்டும் வண்ணம் அமைந்திருந்தது.

தலைவர் முடிவுரைக்குப் பின் சிறப்புக் கூட்டம் இனிது முடிவடைந்தது.

# செய்திச் சுருள்

★

**நாகை—வெளிப்பாளையம் பகுத்தறிவுப் படிப்பகம்**

21-3-57-ல் இவ்வூர் பப்ளிக் ரோடில், மேற்படி படிப்பகம் தொடங்கப்பெற்று, தோழர்கள் பி. முருகையன் செயலாளராகவும், கே. சண்முகம் துணைச்செயலாளராகவும், என். பி. திருப்பதிசாமி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**கும்பகோணம் பன்னீர்செல்வம்படிப்பகம்**

22-3-57-ல் மேற்படியூர் பன்னீர்செல்வம் படிப்பகத்தின் பொது உறுப்பினர் கூட்டம் நடைபெற்றபோது பல முக்கிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

**மதுரை—குயவர்பாளையம் கல்லக்குடி நடராசன் நினைவுப் படிப்பகம்**

23-3-57 இரவு 10 மணிக்கு கல்லக்குடி நடராசன் நினைவுப் படிப்பகத்தின் உறுப்பினர்கள் கூட்டம் நடைபெற்றபோது ச. அன்பானந்தன் செயலகளராகவும், சி. இரத்தினம் துணைச் செயலாளராகவும், அ. குருசாமி பொருளாளராகவும், வே. காசிராசன் விளம்பர உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டதோடு வெற்றி பெற்ற கழகத் தோழர்களுக்குப் பாராட்டு தெரிவிக்கப்பட்டது.

**சென்னை-18 ஏரிக்கரை திரு. வி. க. நூல் நிலையம்**

31—3—57 பகல் திரு. வி. க. நூல் நிலைய அமைப்புக் கூட்டம் தோழர் கே. கோவிந்தசாமி தலைமையில் நடைபெற்றபோது, தோழர்கள் மு. புருஷோத்தமன் தலைவராகவும், இரா. சடகோபன் செயலாளராகவும், நடராசன் துணைச் செயலாளராகவும், வி. கிருஷ்ணன் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டதோடு, தேர்தலில் வெற்றி பெற்றகழகத் தோழர்களுக்கு பாராட்டுக் கூட்டம் நடத்துவது பற்றியும் தீர்மானிக்கப்பட்டது.

**சென்னை—பி. & சி. ஆலை தி.மு.க. தேர்தல் நிதிக்குழு**

1—4—57 மாலை மேற்படி நிதிக்குழு உறுப்பினர் கூட்டம், திரு. வி. க. மறுமலர்ச்சி மன்ற பணிமனையில் தோழர் கே. சுப்பிரமணி தலைமையில் நடைபெற்றபோது, வரவு - செலவு ஒப்புக்கொள்ளப்பட்டும், பாராட்டுக் கூட்டம் நடத்துவது பற்றியும் தீர்மானிக்கப்பட்டது.

**மாடக்குளம் முத்து இளைஞர் படிப்பகம்**

29-3-57-ல் மாடக்குளம் முத்து இளைஞர் படிப்பகத்தின் உறுப்பினர் கூட்டம் தோழர் அ. வெள்ளைச்சாமி தலைமையில் நடைபெற்றபோது, தோழர்கள் வி. இராமநாதன் செயலாளராகவும், மூ. வெள்ளைச்சாமி துணைச் செயலாளராகவும், ஆ. முனியாண்டி பொருளாளராகவும், அ. வெள்ளைச்சாமி மாவட்டப் பிரதிநிதியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டதோடு ஆண்டு விழா நடத்துவது பற்றியும், தி. மு. கழகத் தோழர்கள் வெற்றிபெற்றதற்கு பாராட்டு தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேறின.

**காஞ்சி நெடுஞ்செழியன் படிப்பகம்**

3—4—57 இரவு காஞ்சி—பிள்ளையார்பாளையம் கிருஷ்ணராயர் தெருவில் மேற்படி படிப்பக அமைப்புக் கூட்டம் நடைபெற்றபோது தோழர்கள் எ. இலட்சுமணன் செயலாளராகவும், அ. வேதகிரி துணைச்செயலாளராகவும், என். வேலு பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டன.

**சேலம்—வேலூர் திருவள்ளுவர் படிப்பகம்**

4—4—57-ல், சுல்தான்பேட்டை பொதுச் சாவடியில் மேற்படி படிப்பக அமைப்புக் கூட்டம் தோழர் வி. ஏ. இராமநாதன் தலைமையில் நடைபெற்றபோது, தோழர் கரூர்-தமிழ்மொழி பேசியபின், தோழர் ஆ. இராமையாவைத் தலைவராகக்கொண்ட ஒரு நிர்வாகக் குழு அமைக்கப்பட்டு, ஒரு தீர்மானமும் நிறைவேறறப்பட்டது.

**சென்னை—மயிலை குயப்பேட்டை கே. வி. கே. சாமி படிப்பகம்**

5—4—57-ல் நடைபெற்ற மேற்படி படிப்பக உறுப்பினர் கூட்டத்தில் இவ்வாண்டிற்கு தோழர்கள் எஸ். வி. வேலு செயலாளராகவும், ஜி. கன்னியப்பன், சீனிவாசன் ஆகியோர் செயலாளர்களாகவும், கோ. இலட்சுமணன் பொருளாளராகவும் மற்றும் 7 பேர் நிர்வாக உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**திருப்பூர்—நாவலர் நெடுஞ்செழியன் படிப்பகம்**

7—4—57 மாலை 5 மணிக்கு, மேற்படி படிப்பகத் துவக்க விழா, மேட்டுப்பாளையம் பி. என். ரோடில், தோழர் பி. கோபால் தலைமையில் நடைபெற்றபோது, தோழர்கள் சி. பழனிசாமி செயலாளராகவும், ப. சோமு துணைச் செயலாளராகவும், கு. பொன்னுசாமிபொருளாளராகவும், மீனாட்சிசுந்தரம் நிர்வாகியாகவும் மற்றும் 5 பேர் செயற்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டதோடு, தி. மு. கழகத்தின் சார்பில் வெற்றி பெற்ற தோழர்களைப் பாராட்டி அனைவருக்கும் இனிப்பு வழங்கப்பட்டது.

**குடியேற்றம் — நல்லூர்பேட்டை 'சூரியன் அறிவகம்'**

29—3—57ல், குடியேற்றம் நல்லூர்பேட்டை 'சூரியன் அறிவக'த்திற்கு, தோழர் கு. சி. பொன்னுசாமி தலைமையில் அவருடைய இல்லத்தில் நடைபெற்றக் கூட்டத்தில், தோழர்கள் அ. க. வேணுகோபால் செயலாளராகவும், மு. உமாபதி துணைச் செயலாளராகவும், சி. குப்புசாமி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**விழுப்புரம் மருத்துவ சமுதாய முன்னேற்ற அமைப்பு**

2—4—57-ல் மருத்துவ சமுதாய முன்னேற்ற அமைப்பிற்கு தோழர் கே. கோவிந்தசாமி தலைவராகக்கொண்டு ஒரு நிர்வாகக் குழு அமைக்கப்பட்டது.

## இலங்கை-புசல்லாவ பகுதி தி. மு. கழக செயலாளர்

### புத்த ஜெயந்திக் குழுத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்

பல்லாயிரக்கணக்கான சிங்கள மக்கள் வாழும் இலங்கை—புசல்லாவ பகுதியில், புத்த ஜெயந்திக் குழு பொதுச் செயலாளராக, மேற்படி பகுதி தி. மு. கழக கிளையின் செயலாளர் தோழர் எம். ஏ. செல்லமுத்து மக்களால் ஒரு மனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இலங்கையில் இப்பதவிக்கு முதல் முதலாக தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு திராவிட இளைஞர் தோழர் எம். ஏ. செல்லமுத்து அவர்கள்தான்.

**சென்னை—எல்லீஸ்புரம் டாக்டர் அம்பேத்கார் படிப்பகம்**

7—4—57 காலை 9 மணிக்கு மேற்படி படிப்பகக் கூட்டம் தோழர் என். கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்றபோது, தோழர்கள் பூ. சம்பந்தம் செயலாளராகவும், சுப்பிரமணியம் துணைச்செயலாளராகவும், லாசர் பொருளாளராகவும் 6 பேர் செயற்குழுவினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**சென்னை 4வது வட்டம் கே. எஸ். பாண்டியன் படிப்பகம்**

7-4-57 காலை 10 மணிக்கு, 53 சஞ்சீவிராயன் கோயில்தெரு, கண்ணப்பர் இல்லத்தில் மேற்படி மன்ற அமைப்புக்கூட்டம் தோழர் த. சேதுராசன் தலைமையில் நடைபெற்றபோது, தோழர்கள் அ. வேணுகோபால் செயலாளராகவும், தி. மது துணைச்செயலாளராகவும், ஏ. கண்ணப்பன் பொருளாளராகவும், மற்றும் 11 பேர் செயற்குழுவினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பம்பாய், ஏப். 15—

மந்திரிகள் இனிமேல் தங்களுக்கு அளிக்கப்படும் வாழ்த்துப் பத்திரங்களை ஏற்றுக்கொள்ளக் கூடாது என்று பம்பாய் மந்திரி சபையில் முடிவு செய்யப்பட்டுள்ளதாம்.



## மறைவு

சென்னை 42-வது வட்ட தி. மு. கழகத் தோழர் காஜா மொய்தீன் அவர்கள் 24-3-57 காலை தமது 25-வது வயதில் இயற்கையெய்தினர் என்ற செய்தியை அறிவிக்க வருந்துகிறோம்.

அன்று மாலை நடைபெற்ற சவ ஊர்வலத்தில் திருவல்லிக்கேணியிலுள்ள பல வட்டங்களைச் சார்ந்த பெருவாரியான கழகத் தோழர்கள் கருப்புச் சின்னமணிந்து கலந்துகொண்டு தங்கள் அனுதாபத்தைத் தெரிவித்துக்கொண்டனர். இடுகாட்டில், மறைந்த தோழருக்கு தோழர் கா. அப்பாதுரையார், தோழியர் அலமேலு— அப்பாதுரையார், தோழர் நீலநாராயணன் ஆகியோர் மாலையிட்டு இறுதி மரியாதை செய்தனர். பின்னர் மீர்சாகிப்பேட்டையில் நடைபெற்ற திருவல்லிக்கேணி தொகுதி தி. மு. க. தேர்தல் குழுவில் ஓர் அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தோழரின் மறைவால் வருந்தும் அவரது அன்னையாருக்கும், உறவினர்களுக்குப் திருவல்லிக்கேணி தி. மு. கழகத் தோழர்கள் தங்கள் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறார்கள்—நமது ஆழ்ந்த அனுதாபமும் உரித்தாகுக. —(ஆ-ர்.)

# முரசொலி - மாறன் 'குலதெய்வம்' படத்திற்குப் புகழ்மாலை!

புதுடில்லி, எப். 17—

'முரசொலி' மாறன் திரைக் கதை - வசனம் எழுதிய 'குல தெய்வம்' என்ற திரைப் படத்திற்கு, இந்தியக் குடியரசுத் தலைவர் இராசேந்திர பிரசாத் பாராட்டு இதழ் வழங்குவார்.

இந்தியா முழுவதும் வெளியாகும் சிறந்த திரைப் படங்களுக்கு, ஒவ்வொரு ஆண்டும் குடியரசுத் தலைவர் பரிசுகள் வழங்கி வருகிறார். இவ்வாண்டுக்கு, இந்தியப் பேரசின் முன்னாள் நிதியமைச்சர் தேஷ்முக் தலைமையில் அமைக்கப்பட்ட திரைப்படத் தேர்வுக் குழுவினர், தமிழ்ப் படங்களில் 'குல தெய்வம்' சிறந்தப் படம் எனத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

இப்படத்தில், இலட்சிய நடிகர் எஸ். எஸ். இராசேந்திரன், சகஸ்ரநாமம், பண்டரிபாய், எம். என். இராசம், மைனாவதி, விசயகுமாரி முதலியோர் நடித்திருக்கின்றனர்.

இத்திங்கள் 28-ம் நாள் டில்லியில் நடைபெறவிருக்கும் விழா ஒன்றில், குடியாசுத் தலைவர் இராசேந்திர பிரசாத் 'குல தெய்வம்' திரைப் படத்திற்கு, அதன் தயாரிப்பாளர்களிடம் பாராட்டிதழ் வழங்குவார்.

★

# அழிவின் உச்சநிலை!

## விஞ்ஞானியின் கணிப்பு

"உலகில் இன்று இருக்கும் அணு ஆயுதங்கள் வெடிக்கப்படுகிறவிதனை வைத்துக்கொண்டால், அவைகளிலிருந்து பரவும் கதிரியக்கச் சக்திகள் மனித சமுதாயத்தின் நாற்பது தலைமுறைகளுக்கும் கெடுதி விளைவிக்கக் கூடியதாக அமையும்" என்று, கிழக்கு ஜெர்மனி விஞ்ஞானி ஒருவர் எச்சரித்துள்ளார்.

# சிறந்த துணை நடிகரென இலட்சிய நடிகர் எஸ். எஸ். இராசேந்திரன் தேர்வு

சென்னை, எப். 17—

சிறந்த துணை நடிகராக, இலட்சிய நடிகர் எஸ். எஸ். இராசேந்திரன் அவர்களை, சென்னை சினிமா ரசிகர்கள் சங்கம் தேர்ந்தெடுத்திருக்கிறது.

சிறந்த திரைப்படமாக, 'முரசொலி' மாறன் திரைக்கதை வசனம் எழுதிய 'குலதெய்வம்' படத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறது, ரசிகர்கள் சங்கம்.

1956-ம் ஆண்டு படத்தேர்வுக் குழுத் தலைவராக திரு. லோபோ பிரபு அவர்களும், நீதிபதிகளாக திருமதி வி. பி. அப்பாதுரை, திருமதி டாக்டர் ஏ. செயலட்சுமிராவ், திருமதி டி. எல். கோபாலரத்தினம், திரு. எஸ். வி. கோவிந்தராசன். திரு. கே. இராதா கிருஷ்ணன், திரு. நாரதர் சீனிவாசராவ் ஆகியோர் இருந்தனர்.

# வடநாட்டு அகதிகள் தொழில் நடத்த டில்லியின் தாராள உதவி

## இதுவரையில் சுமார் ரூ. 15 கோடி கடன் வழங்கப்பட்டதாகத் தகவல்

புதுடில்லி, எப். 16—

மேற்கு பாகிஸ்தானிலிருந்து வெளியேறிவந்துள்ள வடநாட்டு அகதிகளுக்கு நகரங்களில் தொழில் நடத்துவதற்கான சிறு கடன்களை வழங்குவதற்காக இந்திய அரசாங்கம் 1957—58-ம் ஆண்டிற்கு ரூ. 20 இலட்சம் ஒதுக்கியிருக்கிறதாம்!

நகரங்களில் தொழில் நடத்துவதற்கான சிறு கடன்கள் உதவித் திட்டத்திகீழ், வடநாட்டு அகதிகளுக்கு இதுவரையில் மொத்தம் ரூ. 14,97,00,000 கடனாகத் தரப்பட்டிருக்கிறதாம்!

1947-ம் ஆண்டில் ஆரம்பித்து வைக்கப்பட்ட, சிறு கடன் உதவித் திட்டத்தின்கீழ் அகதிகள் ஒவ்வொருவருக்கும் ரூ. 5,000 வீதம் கடன் உதவி அளிக்கப்பட்டு வருகிறதாம்!

# கரும்புச் சக்கையிலிருந்து பத்திரிகைக் காகிதம்!

## ஆந்திர மாநிலத்தில் அமையும்

ஐதராபாத், எப். 17—

இந்தியாவில் இரண்டாவது பத்திரிகைக் காகித உற்பத்தித் தொழிற்சாலை ஆந்திர மாநில நைசாமாபாத் மாவட்டத்தில், நிசாம் சர்க்கரை ஆலைக்கு அண்மையில் விரைவில் ஏற்படுத்தப்படுமாம்.

கரும்புச் சக்கையிலிருந்து பத்திரிகைக் காகிதம் செய்யும் தொழிற்சாலை இந்தியாவில் இதுவே முதலாவதாகும்.

இந்தத் தொழிற்சாலை மூலதனச் செலவு ரூ.5 கோடியாகும்.

இதில், ஆண்டுக்கு 30,000 டன் காகிதம் உற்பத்தியாகும்.

இந்த இரண்டு ஆலைகளிலும் மொத்தம் 60,000 டன் காகிதம் உற்பத்தியாகலாம். இந்தியாவில் மொத்த பத்திரிகைக் காகிதத் தேவை ஆண்டுக்கு 1,20,000 டன்களாகும்.

இந்த இரண்டு ஆலைகளின் உற்பத்தியால் வெளிநாட்டு இறக்குமதி குறைவதால் வெளிநாட்டுச் செலாவணி ஆண்டுக்கு சுமார் ரூ. 2½ கோடி மிச்சமாகும்.

# தேபர் கண்ணோட்டம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இல்லை. ஆனால், காங்கிரசுக்காரர் உண்மையான காங்கிரசுக்காரராக இல்லாது வழுக்கிவிடும் பொழுது தான் ஒருவன் ஏமாற்றத்தை உணருகிறான்.

"நாம், வகுக்கும் செயல்முறை பற்றியே கருதுகிறோம். ஆனால் அச்செயல்முறையோ, மக்களின் கருத்தையும் இதயத்தையும்பெறுவதற்காக நாம் எந்த அளவுக்கு அதைச் செயலாற்றுகிறோமோ அதே அளவுக்குத்தான் அது உறுதியாகப் பயன்படும். மக்கள் அன்பும் நம்பிக்கையுமே நமது போராட்டத்தின் சாராம்சமாகும்.

"சில சந்தர்ப்பங்களில், புரட்சியானது, அதை உருவாக்கினவர் கரங்களிலிருந்து கழன்றுச் சென்றுவிடுவதும் உண்டு; அது, புரட்சிக்குத் திட்டமிட்டவர்களை அழித்துவிடவும் கூடும். நம்முடைய பிடியிலிருந்து புரட்சியானது துண்டித்துச் சென்றுவிடக்கூடிய கட்டத்தில் நாம் இருந்துவருகிறோம்.

"எனவே, மேலிடத்தை அலைக்கழித்துக் கொண்டிருப்பதும், உங்களையும் கவலைக்குள்ளாக்கியிருப்பதும் ஒன்றே ஒன்றுகும்; அந்த ஒன்று, நமது கட்சியின்மீது மக்கள் நம்பிக்கையை இழந்து வருகின்றனர் அல்லது நாம் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றக் கருத்தாற்றல் இல்லை எனக் கருதுகின்றனர் என்பதேயாகும்."

# இந்தியாவிடம் கையிருப்பு வசதி இல்லையாம்!

## இந்தியாவிலிருந்து இலண்டன் திரும்பிய நிபுணர் கூற்று

"கனரகத் தொழில்களைப் பரவலாக்க இந்தியா முயலுகிறது. இந்தத் துறையில் உதவி செய்து, தன்னுடைய வியாபாரத்தையும் பெருக்கிக் கொள்ள பிரிட்டனுக்கு வாய்ப்புண்டு. வெளிநாடுகளுடன் தாராளமாக வியாபாரம் செய்யும் நிலையில் இந்தியாவிடம் கையிருப்பு வசதியில்லை. இந்தியா கோரும்வண்ணம் கடன் வசதியளிக்கும் நிலையில் பிரிட்டன் இல்லை என்றாலும், வேறு வழிகளில் உதவக்கூடும்"

என்று, இந்தியாவில் மூன்று வார காலம் தங்கிவிட்டு, இலண்டனுக்குத் திரும்பிய சர். நார்மன் கிப்பில் என்பார் கூறியுள்ளார்.

# இந்தியா — பாகிஸ்தான் இடையே எல்லைக்கோடு

## குறிப்பதற்கு 1,200 தூண்கள்

இந்தியாவுக்கும் — பாகிஸ்தானுக்குமிடையே எல்லைக் கோட்டை நிரந்தரமாகக் குறிப்பதற்கு மேற்கொள்ளப்பட்ட பணியில், இதுவரையில் மொத்தம் 120 மைல் நீளத்திற்குச் சுமார் 1,200 தூண்கள் நடப்பட்டிருப்பதாகத் தகவல் கிடைத்துள்ளனவாம்.

## உங்கள் குறிப்புக்கு!

புதுடில்லி. எப். 16—

இவ்வாண்டில், அமெரிக்கத் தொழில் நுணுக்க உதவித் திட்டத்தின் கீழ் இந்தியாவுக்கு ரூ. 1,09,35,000 உதவி கிடைக்குமாம்.

# 76,000 சதுர அடி பரப்பளவில் டில்லியில் பால் பண்ணையாம்!

## ரூ. 3,28,00,000 செலவில் உருவாகுமாம்!

### பாலைக் குளிர்ச்சிப்படுத்த ரூ.23 இலட்சம் மதிப்புள்ள இயந்திர சாதனங்கள் பயன்படுத்தப்படுமாம்

### 2,000 மாடுகள் கொண்ட காலனி ஒன்றை அமைக்கவும் திட்டமாம்!

புதுடில்லி, எப். 17—

பால்பண்ணை அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் டில்லி ஆனந்த் பர்பத் பகுதியில் மத்திய பால் பண்ணை ஒன்றை அமைப்பதற்கு ஏற்ற கட்டடமொன்றை நிர்மாணிப்பதுபற்றி விவாதிக்கப்பட்டிருக்கிறது.

இதற்கான கட்டடம் மொத்தம் 76,000 சதுர அடி பரப்பளவைக் கொண்டதாக இருக்கும். மத்தியக் கட்டடம் தவிர, சிர்வாகப் பகுதிக்கும், சிப்பந்திகளின் குடியிருப்புகளுக்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

டில்லி பால் பண்ணை அபிவிருத்தித் திட்டத்துக்குக் கொழும்புத் திட்டத்தின்கீழ் நியூஜிலாந்து சர்க்காரிடமிருந்து உதவி கிடைத்து வருகிறது. இந்தத் திட்டத்துக்கு மொத்தம் ரூ. 3,28,00,000 செலவாகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

நியூஜிலாந்து அளிக்கும் உதவி. ரொக்க மானியமாக சுமார் 8,00,000 பவுனும், தொழில் நுட்ப உதவியும் கலந்ததாக இருக்கும்.

மற்றொரு திட்டத்துக்கும்—கல்கத்தா பால் பண்ணை அபிவிருத்தித் திட்டம்--ஆஸ்திரேலியா, கனடா, நெதர்லாந்து நாடுகள், நியூஜிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளிலிருந்து, சர்வதேச உணவு நிறுவனம் மூலமாக மொத்தம் 5,04,000 டாலர்வரையிலும் உதவியளிக்கப்பட்டு வருகிறது.

டில்லி பால் பண்ணைத் திட்டத்தின்கீழ், டில்லி பிரதேசத்தையும் உத்திரப் பிரதேசத்தில் உள்ள அதைச் சார்ந்த பிரதேசங்களையும் சேர்ந்தகிராமங்களிலிருந்துபாலைக் கொள்முதல் செய்வதற்கும், சுமார் 2,000 கறவை மாடுகளைக் கொண்ட காலனியொன்றை அமைப்பதற்கும் திட்டமிடப்பட்டிருக்கிறது.

பாலைக் குளிர்ச்சிப்படுத்துவதற்காக 46 இயந்திர சாதனங்கள் உபயோகிக்கப்படும். இந்தச் சாதனம் ஒவ்வொன்றும் சுமார் ரூ. 50,000 விலை மதிப்புள்ளவை. தற்போது இதுபோன்ற 19 சாதனங்கள் அமைக்கப்படுமென்று எதிர்ப்பார்க்கப்படுகிறது.

பாலைப் பக்குவப்படுத்தி, புட்டிகளில் நிரப்பி, விநியோகிக்க ஏற்பாடு செய்வதற்காக டில்லியில் பெரிய பால்பண்ணையொன்று அமைக்கப்படும். இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக சட்டபூர்வமான போர்டு ஒன்றும் டில்லியில் ஏற்படுத்தப்படும்.

பால்பண்ணை காலனியிலிருந்து தினசரி கிடைக்கும் 5,000 - மணங்கு பாலைத் தவிர, டில்லி பிரதேசத்தில் உள்ள கிராமங்களிலிருந்து தினசரி கொள்முதல் செய்யப்படும் 1,500 மணங்கு பாலையும் சேர்த்து இந்தத் திட்டத்தின்கீழ் நாளொன்றுக்கு மொத்தம் சுமார் 7,000 மணங்கு பால் பக்குவப்படுத்தப்பட்டு விநியோகிக்கப்படுமென்று எதிர்ப்பார்க்கப்படுகிறது. பாலை விநியோகிப்பதற்காக நகரத்தின் பல்வேறு பகுதிகளில் மொத்தம் சுமார் 1,000 விற்பனை டிப்போக்கள் ஏற்படுத்தப்படும்.

# டால்மியா நகரில் காகிதத் தொழிற்சாலை

## ரூ. 2-கோடி மதிப்புள்ள இயந்திரங்கள் வெள்ளோட்டம்

டால்மியாநகர், எப். 17—

இங்குள்ள ரோடாஸ் கைத்தொழில் நிறுவனத்தின் காகிதத் தொழிற்சாலையின் ரூ. 2-கோடி. விலையுள்ள இரண்டு புதிய இயந்திரங்களை, மத்திய மந்திரி மொரார்ஜி தேசாய் வெள்ளோட்டம் நடத்தியுள்ளார்.

இவைகளில், ஆண்டுதோறும் சுமார் 12,000 டன் பலரகக் காகிதங்கள் உற்பத்தியாகும்.

இதனால், வெளிநாட்டுக் காகித இறக்குமதி குறைந்து ஆண்டுதோறும் இந்தியாவுக்கு அயல் நாட்டுச் செலாவணி ரூ. 2-கோடி மிச்சமாகும்.

இந்தியாவில் உற்பத்தி செய்யப்படும் மொத்த காகிதத்தில் ஐந்தில் ஒருபகுதி இத்தொழிற்சாலையில் உற்பத்தியாகிறதாம்.

# தேர்தல் சம்பந்தமான மனுக்கள் அனுப்பும் நடைமுறை பற்றி விவரம்

## மனுவுடன் ரூ. 1,000 ஜாமீன் தொகையாகச் செலுத்த வேண்டும்

### தேர்தல் குழுவின் பத்திரிகைக் குறிப்பு

1951-ம் வருடத்திய மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தின் 81-வது பிரிவின்கீழ், தேர்தல் சம்பந்தமான மனுக்கள், தேர்தல் குழுவின் செயலாளரிடமோ அல்லது தேர்தல் குழு இதற்காக நியமிக்கும் இதர அதிகாரியிடமோ சமர்ப்பிக்கப்பட வேண்டும்.

குறிப்பிட்ட சட்டத்தின் 6-வது பாரத்தில் அடங்கியுள்ள பிரிவுகளின்படி சமர்ப்பிக்கப்படும் தேர்தல் மனுக்களைப் பெற்றுக்கொள்வதற்காக அதிகாரி ஒருவர் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

இந்த மனுக்களின் செலவுகளுக்கு ஜாமீன் தொகையாக மனுதாரர்கள், மனுக்களைச் சமர்ப்பிப்பதற்கு முன்பு ரூ. 1,000 செலுத்த வேண்டும்.

அவ்வாறு ஜாமீன் பணம் செலுத்தியதற்கு அத்தாட்சியாக சர்க்கார் கஜானா ரசீதை மனுக்களுடன் சேர்த்து அனுப்ப வேண்டும்.

இந்த ஜாமீன் பணத்தை சர்க்கார் கஜானாக்களிலும், இந்திய ரிசர்வ் பாங்கி காரியாலயங்களிலும் செலுத்தலாம்.

தொகைகள் பின்வரும் தலைப்பின்கீழ், தேர்தல் கமிஷன் காரியதரிசியின் பேருக்குச் செலுத்தப்படவேண்டும்.

"மத்திய (சிவில் இன) பிரிவு-பி டிபாசிட்டுகளும் முன்பணங்களும் வட்டி இல்லாத 2-வது பகுதி டிபாசிட்டுகள் (சி) இதர டிபாசிட்டு கணக்குகள்—சிவில் இன டிபாசிட்டுகள்—ரெவினியூ டிபாசிட்டுகள்—தேர்தல் மனுக்களுக்கான டிபாசிட்டுகள்."

மனுதாரர்கள், தேர்தல் மனுக்களுடன் போதிய எண்ணிக்கையில் மனுப் பிரதிகளையும் (பிரதிவாதி ஒவ்வொருவருக்கும் ஒரு பிரதி வீதமும், அதிகப்படியாக மூன்று பிரதிகளும்) சேர்த்து அனுப்பினால் அம் மனுக்களைத் துரிதமாகப் பைசல் செய்ய பெரிதும் வசதியாக இருக்கும்.

## மறைவு

புழல் தி. மு. கழக உறுப்பினர் டெய்லர் தேவராசன் (வயது 28) அவர்கள் 16-4-57 செவ்வாய் பகல் 2 மணிக்குத் திடீரென இயற்கை எய்தினர் என்றும், 17-4-57 புதன் மாலை சவஅடக்கம் நடைபெறுமென்றும் புழல் தி. மு. கழகச் செயலாளர் அறிவிக்கிறார்.

# அறந்தாங்கியில் க. அன்பழகன்

19—4—57 பகல் 12-மணியளவில் அறந்தாங்கி வட்ட தி. மு. கழகங்களின் சார்பில், அறந்தாங்கி தி. மு. கழகப் பணிமனையில் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கு வரவேற்பளிக்கப்படும்.

அன்று மாலை மாவட்டக் கழக உயர்நிலைப்பள்ளி ஆண்டுக் கூட்டத்தில், பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் 'குறள்நெறி' என்னும் பொருளில் சொற்பொழிவாற்றுவார்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

